னுத்திவிடும்.எ - று. ❋ இருளென்பது - நரகவகையிலொன்று(௧)

காக்க பொருளா வடக்கத்தை யாக்க - - ❋
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு. - - - (௨)

இ-ள், அடக்கத்தை — பொருளா - (உறுதிப்) பொருளாக — காக்க- காக்கக்கடவன். — உயிர்க்கு — அதனினூங்கு - அதனின்மேற்பட்ட — ஆக்கம் - செல்வமானது | — இல் - இல்லை (ஆதலால்) .எ - று. ❋ உயிர் இங்கே மனிதருயிரைக்காட்டிநின்றது. அறிந்து அடங்கிப்பயன்கொள்வது அதுவேயாகலின். (௨)

செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந் , - - ❋
தாற்றி னடங்கப் பெறின். - - - - (௩)

இ-ள். அறிவறிந்து- (அடங்குதலேநமக்கு) அறிவாவதென்று அறிந்து — ஆற்றின்- நல்லவழியால் — (ஒருவன்) — அடங்கப்பெறின் — செறிவு- அவ்வடக்கமானது | — அறிந்து - (நல்லோரால்) அறியப்பட்டு- சீர்மை- மேம்பாட்டை — பயக்கும் - (அவனுக்குத்) தரும்.எ. று. ❋ இல்வாழ்வானுக்கு அடங்கும்வழியாவது - காயமும் வாக்குமனமும் அவன்வசப்படுதல், -(௩)

நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற - - - ❋
மலையினு மாணப் பெரிது. - - - - (௪)

இ - ள். நிலையின் - (இல்வாழ்க்கையாகியதன்) வழியில் — திரியாது - வேறுபடாது( நின்று ) — அடங்கியான் - அடங்கினவனது — தோற்றம் - உயர்ச்சியானது — மலையினும் - மலையுயர்ச்சியினும் — மாணப்பெரிது - மிகப்பெரிதாம்.எ - று. ❋ வேறுபடாது நின்று அடங்குதல் - ஐம்பொறிகளாலும், ஐம்புலங்களையும் அனுபவித்துக்கொண்டிருந்தே அடங்குதல். மலை அதனுயர்ச்சியை உணர்த்தலால் ஆகுபெயர். (௪)

எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ் - - ❋
செல்வர்க்கே செல்வந் தகைத்து. - - - (௫)

இ-ள். பணிதல் - (பெருமைப்பாடில்லா)தடங்குதல் | — எல்லார்க்கும் — நன்றாம் - (ஒப்ப)நன்றாகும்-(ஆயினும்) - அவருள்ளும் — செல்வர்க்கே — செல்வந்தகைத்து - வேறொருசெல்வமாய்த்தோன்றுஞ் சிறப்பினையுடையதாம்.எ - று. ❋ பெருமைப்பாட்டையுண்டாக்கும் - கல்வியும், குடிப்பிறப்பும், உடைய

வர்- அறிவில்லாமல் அவைகளாலே அடங்கிவிடத்து- அவ்வடக்கம் சிறந்து தோன்றுதாதலின்- செல்வர்க்கே செல்வந்தகைத்தென்றார். செல்வத்தகைத்தென்றது- விகாரப்பட்டுநின்றது. [இவையைந்துபாட்டாலும் பொதுவகையால் அடக்கத்தினதுசிறப்புச் சொல்லப்பட்டது. (௫)

ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி ※
னெழுமையு மேமாப் புடைத்து. (௬)

இ-ள். (ஒருவன்) — ஒருமையுள் - ஒருபிறப்பின்கண்ணே — ஆமைபோல் — ஐந்து - ஐந்தை — அடக்கலாற்றின் - அடக்கவல்லவனாகில் — (அவ்வல்லமை அவனுக்கு) — எழுமையும்-எழுபிறப்பின்கண்ணும் — ஏமாப்புடைத்து - காவலாதலையுடையதாம். எ-று. ※ ஆமை அடக்குமைந்து - கால்கள் நான்கும், தலையொன்றும், ஆகியவுறுப்புகள். அவ்வடக்கம் - துன்பஞ்சேராதிருத்தற்கு ஒருவன் அடக்கவேண்டுமைந்து - மெய்வாய் கண்மூக்குச் செவியென்னும் பொறிகள். இவ்வடக்கம் பாபம் சேராதிருத்தற்கு. ஒருபிறப்பிலே செய்யப்பட்ட வினைப்பயன் - எழுபிறப்புந் தொடருமென்பது - இதனாலறிக. [இதனாலே காயத்தினடக்கம் சொல்லப்பட்டது.] (௬)

யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற் ※
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (௭)

இ-ள். யா - (காக்கவேண்டுமவை) யாவையும் — காவாராயினும் - காக்கமாட்டாராயினும் — நா - நாவொன்றையும் — காக்க - காக்கக்கடவன், — காவாக்கால் - (அதனைக்) காக்கமாட்டாராயின் — சொல்லிழுக்குப்பட்டு - சொற்குற்றத்திலே அகப்பட்டு — சோகாப்பர் - (தாமே) துன்பப்படுவார். எ-று. ※ யாவென்பது - எவையென்னும் பொருளைத் தருகிற அஃறிணைப் பன்மைவினாப்பெயர். சொற்குற்றம் - சொல்லிடத்தே தோன்றுங்குற்றம். சோகாப்பரென்பது ஒருசொல். (௭)

ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி ※
னன்றாகா தாகி விடும். (௮)

இ-ள். தீச்சொல் - தீயசொற்களது — பொருட்பயன் - பொருள்களாலே (பிறருக்குவரும்) பயனானது — ஒன்றானும் - ஒன்றாயினும் — உண்டாயின் - (ஒருவனிடத்திலே) உண்டாவதாயி

துத்திவிடும்.எ - று. இருளென்பது - நரகவகையிலொன்று (௧)

காக்க பொருளா வடக்கத்தை யாக்க - - *
மதனினூஉங் கில்லை யுயிர்க்கு. - - - (௨)

இ-ள், அடக்கத்தை — பொருளா - (உறுதிப்) பொருளா க— காக்க- காக்கக்கடவன்.— உயிர்க்கு — அதனினூங்கு - அ தனின்மேற்பட்ட — ஆக்கம் - செல்வமானது | — இல் - இல்லை (ஆதலால்) .எ - று. உயிர் இங்கே மனிதருயிரைக்காட்டி நின் றது. அறிந்து அடங்கிப்பயன்கொள்வது அதுவேயாகலின். (௨)

செறிவறிந்து சீர்மை பயக்கு மறிவறிந் , - - *
தாற்றி னடங்கப் பெறின். - - - - (௩)

இ-ள். அறிவறிந்து - (அடங்குதலேநமக்கு) அறிவாவதென் று அறிந்து — ஆற்றின் - நல்லவழியால் — (ஒருவன்) — அடங்கப் பெறின் — செறிவு - அவ்வடக்கமானது | — அறிந்து - (நல்லோ ரால்) அறியப்பட்டு - சீர்மை - மேம்பாட்டை — பயக்கும் - (அ வனுக்குத்) தரும்.எ - று. இல்வாழ்வானுக்கு அடங்கும்வழி யாவது - காயமும் வாக்குமனமும் அவன்வசப்படுதல், - (௩)

நிலையிற் றிரியா தடங்கியான் றோற்ற - - - *
மலையினு மாணப் பெரிது. - - - - (௪)

இ - ள். நிலையின் - (இல்வாழ்க்கையாகியதன்) வழியில் — திரியாது - வேறுபடாது (நின்று) — அடங்கியான் - அடங்கினவ னது — தோற்றம் - உயர்ச்சியானது — மலையினும் - மலையுயர் ச்சியினும் — மாணப்பெரிது - மிகப்பெரிதாம்.எ - று. வே றுபடாது நின்று அடங்குதல் - ஐம்பொறிகளாலும், ஐம்புலங் களையும் அனுபவித்துக்கொண்டிருந்தே அடங்குதல். மலை அதனுயர்ச்சியை உணர்த்தலால் ஆகுபெயர். (௪)

எல்லார்க்கு நன்றாம் பணித லவருள்ளுஞ் - - *
செல்வர்க்கே செல்வந் தகைத்து. - - - (௫)

இ-ள். பணிதல் - (பெருமைப்பாடில்லா) தடங்குதல் | — எல் லார்க்கும் — நன்றாம் - (ஒப்ப) நன்றாகும் - (ஆயினும்) - அவரு ள்ளும் — செல்வர்க்கே — செல்வந்தகைத்து - வேறொருசெல்வ மாய்த்தோன்றுஞ் சிறப்பினையுடையதாம்.எ - று. பெருமை ப்பாட்டையுண்டாக்கும் - கல்வியும், குடிப்பிறப்பும், உடைய

வர்- அது இல்லாமல் அவைகளாலே அடங்கியவிடத்து - அவ்வடக்கம் சிறந்து தோன்றுதாதலின் - செல்வர்க்கே செல்வந்தகைத்தென்றார். செல்வத்தகைத்தென்றது - விகாரப்பட்டுநின்றது. [இவையைந்துபாட்டாலும் பொதுவகையால் அடக்கத்தினதுசிறப்புச் சொல்லப்பட்டது. (௫)

ஒருமையு ளாமைபோ லைந்தடக்க லாற்றி *
னெழுமையு மேமாப் புடைத்து. (௬)

இ-ள். (ஒருவன்)— ஒருமையுள் - ஒருபிறப்பின்கண்ணே— ஆமைபோல்— ஐந்து - ஐந்தை— அடக்கலாற்றின் - அடக்கவல்லவனாகில்— (அவ்வல்லமை அவனுக்கு)— எழுமையும் - எழுபிறப்பின்கண்ணும்— ஏமாப்புடைத்து - காவலாதலையுடையதாம். எ-று. ✽ ஆமை அடக்குமைந்து - கால்கள் நான்கும், தலையொன்றும், ஆகியவுறுப்புக்கள். அவ்வடக்கம் - துன்பஞ்சேராதிருத்தற்கு ஒருவன் அடக்கவேண்டுமைந்து - மெய்வாய் கண்மூக்குச் செவியென்னும் பொறிகள். இவ்வடக்கம் பாபஞ் சேராதிருத்தற்கு. ஒருபிறப்பிலே செய்யப்பட்ட வினைப்பயன் - எழுபிறப்புந் தொடருமென்பது - இதனாலறிக. [இதனாலே காயத்தினடக்கம் சொல்லப்பட்டது.] (௬)

யாகாவா ராயினு நாகாக்க காவாக்காற் *
சோகாப்பர் சொல்லிழுக்குப் பட்டு. (௭)

இ-ள். யா - (காக்கவேண்டுமவை) யாவையும்— காவாராயினும் - காக்கமாட்டாராயினும்— நா - நாவொன்றையும்— காக்க - காக்கக்கடவன்,— காவாக்கால் - (அதனைக்) காக்கமாட்டாராயின் — சொல்லிழுக்குப்பட்டு - சொற்குற்றத்திலே அகப்பட்டு— சோகாப்பர் - (தாமே) துன்பப்படுவார். எ-று. ✽யாவென்பது - எவையென்னும் பொருளைத் தருகிற அஃறிணைப்பன்மைவினாப்பெயர். சொற்குற்றம் - சொல்லிடத்தே தோன்றுங்குற்றம். சோகாப்பரென்பது ஒருசொல். (௭)

ஒன்றானுந் தீச்சொற் பொருட்பய னுண்டாயி *
னன்றாகா தாகி விடும். (௮)

இ-ள். தீச்சொல் - தீயசொற்களது — பொருட்பயன் - பொருள்களாலே (பிறருக்குவரும்) பயனானது— ஒன்றானும் - ஒன்றாயினும்— உண்டாயின் - (ஒருவனிடத்திலே) உண்டாவதாயி